[Sri R. Venkataraman] [13th September 1958

சர்க்காரைப் பொறுத்த அளவில், தொழிலாளர் நலன் பாதிக்கப்படுமானால், அல்லது முதலாளிகளின் நலன் பாதிக்கப்படுமானால், இந்தத் தொழில் க்ஷீணித்து விடும், அதைத் தவிர்த்து இந்தத் தொழில் வளர்ச்சியடைய வேண்டுமென்று நடு நிலையாக இந்தச் சட்டத்தைக் கொண்டு வந்திருக்கிறோம். அந்த எண்ணம் நிறைவேறும் என்று நம்புகிறேன். அதற்கு எல்லோரும் ஒத்துழைக்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டு இந்த மசோதாவை நிறைவேற்றவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

MR. SPEAKER : The question is—

"That the Madras Beedi Industrial Premises (Regulation of Conditions of Work) Bill, 1958, as amended (L.A. Bill No. 18 of 1958) be passed."

The motion was put and carried and the Bill as amended was passed.

### II.—ANNOUNCEMENTS BY THE HON. SPEAKER—*cont.*

### (2) HOURS OF SITTING ON 17TH SEPTEMBER 1958.

MR. SPEAKER : Before I come to the next item, I have an announcement to make to the House. After the half-hour debate, this House will adjourn and meet again on the 17th. As many hon. Members have told me that they would like the House to meet at 11 a.m. on that day as they have to return from their respective places, under the powers vested in me, I have decided that the House will sit from 11 a.m. to 5 p.m. on that day only. On the next day the House will meet at 9 a.m.

### VIII.—HALF-HOUR DEBATE *RE* LEASE OF MAGNESITE DEPOSITS IN SALEM.

MR. SPEAKER : The next item is, half-hour debate on Magnesite. May I know whether the Hon. Minister will take 10 minutes or even more?

* THE HON. SRI R. VENKATARAMAN : Sir, I would require about 15 minutes and I would not mind even if the debate takes 30 or 35 minutes.

* SRI K. VINAYAKAM : Sir, according to the rules, at the end of the 30th minute, the Hon. Speaker will leave the House and no more discussion can be carried on. So we have to adjust among ourselves within 30 minutes and the Hon. Speaker has no right to continue the debate after the 30th minute.

SRI P. G. KARUTHIRUMAN : Sir, with the permission of the House, the House can sit longer.

MR. SPEAKER : In a way the hon. Member is right. The proviso to Rule 39 of the Assembly Rules says—

"Provided that on notice given to the Speaker at question-time, the Speaker may, in his discretion, allow half an hour after

13th September 1958] . [Mr. Speaker]

the conclusion of the business of the day, to enable a member to raise a debate on any matter of urgent importance which has been the subject of a question on that day. No vote shall be taken on such debate and such time shall not be available for the transaction of any other business."

I am not sure whether this Rule covers the time taken for the reply of the Minister. But I am quite sure that it covers only the time allowed for Members. So, I have got the liberty to give 15 minutes to the Minister.

* SRI K. VINAYAKAM : On a point of order, Sir. This august House, after considerable deliberation, have formulated some rules to be followed in respect of the proceedings of this House. It is definitely laid down beyond any reasonable doubt that in the case of the half-hour debate, at the stroke of the 30th minute,—it is the practice even in the Mother of Parliaments—the Hon. Speaker disappears from the House. So, are we to follow the rules laid down or are we to flout them as we like?

MR. SPEAKER : I am glad the hon. Member has quoted the Mother of Parliaments. Anyhow, the interpretation of the rule is left to me. When the hon. Member occupies the Chair, he can give his own ruling. I can also give him an opportunity by including him in the Panel of Chairmen at the next sitting of the House and when such a matter comes up, he can give his own ruling. So, I interpret that 15 minutes can be given to the Hon. Minister for his reply after the half-hour discussion by hon. Members.

SRI T. S. RAMASWAMY PILLAI : கனம் சபாநாயகர் அவர்களே, சேலத்தில் உள்ள மாக்னெஸைட் கனியைப் பொறுத்த அளவில், இந்த ராஜ்யம் மட்டுமல்ல, இந்த நாடு மட்டுமல்ல, உலகம் பூராவுக்கும் தேவையான ஒரு முக்கிய கனிப் பொருள். கம்யூனிஸ்ட் ராஜ்யங்களைத் தவிர, வேறு ராஜ்யங்களைப் பொறுத்த அளவில், இரும்பை எஃகு ஆக ஆக்க இந்த மாக்னெஸைட் ரிப்ராக்டரி தேவை என்று கூறுகிறார்கள். வெள்ளையர்கள் ஆண்ட காலத்திலே ஒரு ஒப்பந்தப் பிரகாரம் இந்தக் கனிப் பொருள் எடுக்கும் பொறுப்பை பிரிட்டிஷ் கம்பெனிக்குக் கொடுத்து, கனிப் பொருளை பிரிட்டிஷார் கொண்டு சென்றிருந்தார்கள் என்பது தெரியும். அந்த ஒப்பந்தம் 1959-ம் வருஷம் ஜனவரி மாதத்தோடு முடிவடைகிறது. அப்படி முடிவடைகிற தருணத்தில் அடுத்தபடியாக என்ன செய்வது என்ற பிரச்னை எழுகிறது. என்ன செய்ய வேண்டுமென்றால், நிச்சயமாக தேசத்துக்கும், உலகத்திற்கும் இன்றியமையாத முக்கிய கனிப் பொருளை நாமே, பொதுத் துறையில் எடுத்துச் செய்தால் நாட்டுக்கும் நல்லது, தொழிலை வளர்ப்பதற்கும் நல்லது. தேசத்தில் சோஷலிஸ்டிக் பேட்டர்ன் 1-20 p.m. ஆப் சொஸைடி ஏற்படுத்துவதாகச் சொல்லிவிட்டு, முக்கியமாக தொழிலையெல்லாம் பொதுத் துறையிலே வளர்ச்சி செய்யவேண்டுமென்று சொல்லிவிட்டு, இதிலே எந்த முறையிலே செய்திருக்கிறார்கள் என்று பார்க்கும்போது மிகவும் மன வேதனையாக இருக்கிறது என்று கூறுகிறேன். இன்று காலையிலே கேள்வி நேரத்திலே கனம் அமைச்சர் அவர்கள் பதில் சொல்லும்பொழுது பர்ன் அண்டு கம்பெனிக்குக் கொடுத்தாய்விட்டது என்று சொன்னார்கள். ஸிண்டிகேட் கம்பெனி என்பது பிரிட்டிஷ் கம்பெனி. அந்தக் கம்பெனியினுடைய உரிமை ஜனவரிமீ 10-ம் தேதியோடு முடிவடைகிறது. பர்ன் அண்டு கம்பெனி என்பது ஒரு வெள்ளை முதலாளித்துவ

[Sri T. S. Ramaswamy Pillai] [13th September 1958

கம்பெனி. அந்தக் கம்பெனிக்கு ஒரு லட்சம் ஸ்டெர்லிங் பவுண்டிற்கு விற்பனை செய்திருப்பதாகச் சொல்லப்படுகிறது. அயல் நாட்டுச் செலாவணிக் கஷ்டம் இருக்கும்பொழுது ஏன் ஒரு லட்சம் ஸ்டெர்லிங் பவுண்டிற்கு கொடுத்திருக்கிறார்கள் ? மாக்னெஸைட் ஸிண்டிகேட் கம்பெனியானது முதலிலே பர்ன் அண்டு கம்பெனிக்கு மாற்றவேண்டுமென்று சொன்னபொழுது, சென்னை சர்க்கார் "கூடாது" என்று தீர ஆலோசனை செய்து முடிவு கட்டினார்கள். அதற்குப் பிறகு அந்தக் கம்பெனி இந்திய சர்க்காருக்கு அப்பீல் செய்தது. இந்திய அரசாங்கமும் கொடுக்கக்கூடாது என்று சொல்லிற்று. அதற்குப் பின்னர் என்ன நடந்தது என்று அறிய விரும்புகிறோம். எதற்காக இப்பொழுது இந்தக் கம்பெனிக்கு மாற்றம் செய்யப்பட்டிருக்கிறது ? அந்தக் கம்பெனி என்ன நிபந்தனைக்கு உட்பட்டது என்று கேட்க ஆசைப்படுகிறேன். இதைப் பற்றி பல வருடங்களாகப் பொது மக்களுடைய பிரதிநிதிகளும், தலைவர்களும் பேசிக்கொண்டிருக்கிறார்கள். இரண்டு ஆண்டுகளுக்கு முன்னர் இப்பொழுது பாராளுமன்ற அங்கத்தினராக இருக்கும் ஸ்ரீ டி. எஸ். பட்டாபிராமன், ஸ்ரீ காளியண்ணன், ஸ்ரீ எப். ஜி. நடேசன் போன்றவர்கள் எல்லாம் அங்கு தொழிலை அமைக்கவேண்டுமென்று மகசர் கொடுத்திருப்பதாக நான் அறிகிறேன். "டெக்னிகல் நோ ஹௌ" தெரிந்தவர்களை வரவழைப்பதற்கு சாத்தியக்கூறுகள் இருக்கின்றன. இந்தத் தொழிலை நடத்த இரண்டு கோடி ரூபாய் வேண்டுமென்று சொன்னார்கள். அதற்குப் பிறகு அது ஒரு கோடி ஆயிற்று. அரசாங்க செய்தித்துறை இலாகா வெளியீட்டில் ரூபாய் 70 லட்சம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இந்த 70 லட்ச ரூபாயிலே ஒரு விமான நிலையம் கட்டுவதும் சேர்ந்திருக்கிறது என்று சொல்லுகிறார்கள். இந்த 70 லட்ச ரூபாய் செலவு செய்வதற்கு சென்னை அரசாங்கத்தால் முடியாமல் போய்விட்டதா ? ஐந்து கோடி ரூபாயை ஒரே நாளில் கடனாக வாங்கக்கூடிய சென்னை அரசாங்கத்திற்கு, strategical importance உள்ள ஒரு முக்கியமான தொழிலை எடுத்து நடத்துவதற்கு 70 லட்சம் ரூபாய் முதல் போட முடியவில்லையா ? ஏன் அந்தத் தொழிலை சர்க்கார் எடுத்து நடத்தக்கூடாது என்று கேட்க விரும்புகிறேன்.

அது மட்டுமல்ல, இந்த பர்ன் அண்டு கம்பெனிக்கு உரிமை இன்னும் ஆறு மாதங்களுக்குத்தான் இருக்கும். அதற்குப் பின்னர் **Mining Minerals Act Regulations** பிரகாரம், 67-வது ஷரத்தின்படி, அவர்களுடைய **term** முடிந்துபோகும். அதற்குப் பிறகு அவர்கள் "ஸ்டாண்டர்டு ரெஜிஸ்தர்" என்ற ஒரு ரெஜிஸ்தரில் பதிவு செய்துகொள்ள வேண்டும். பதிவு செய்வதற்கு முன்னர் ஒரு மாத நோட்டீஸ் கொடுக்கவேண்டும். வேறு யாராவது தொழில் நிபுணர்கள் முன் வந்தால் அவர்களுக்குக் கொடுக்கலாம். இத்தகைய நிலைமை ஏற்படவில்லை. எதற்காக அவசரமாக நடவடிக்கை எடுக்கப்பட்டது என்று நான் கேட்கிறேன்.

## IX.—GOVERNMENT MOTION.

### MOTION UNDER RULE 235 OF THE ASSEMBLY RULES.

MR. SPEAKER : I think the hon. Member, Sri K. Vinayakam is right. He has pointed out to rule 39 of the Assembly Rules under which no debate can take place beyond half an hour unless a motion is made under Rule 235 by a member and carried by three-fourths of the members present and voting at the meeting. I have no objection to such a motion. Therefore, either I should take a vote now itself or at the end of the half-hour. Somebody will have to move a motion under Rule 235, to enable the Hon. Minister to reply. Any member or the Hon. Minister may move it.

13th September 1958]

* THE HON. SRI R. VENKATARAMAN : Sir, under Rule 235 of the Assembly Rules, I move—

"That the proviso to Rule 39 be suspended with refrence to the time limit prescribed therein in its application to this discussion and that three-quarters of an hour be allotted for the discussion."

MR. SPEAKER : The question is—

"That the proviso to Rule 39 be suspended with refrence to the time limit prescribed therein in its application to this discussion and that three-quarters of an hour be allotted for the discussion."

The motion was put and carried by three-fourths of the members present and voting at the meeting.

### VIII.—HALF-HOUR DEBATE *RE* LEASE OF MAGNESITE DEPOSITS IN SALEM—*cont.*

MR. SPEAKER : Now, the hon. Member, Sri T. S. Ramaswamy Pillai should not monopolise all the available time. Already there are five members who have given their names to speak. So, Sri T. S. Ramaswamy Pillai will finish his speech as early as possible and out of the available time, I fix five minutes for each of the other members. In all fairness to the other Members, Sri Ramaswamy Pillai will kindly finish the speech soon.

SRI T. S. RAMASWAMY PILLAI : இன்னும் இரண்டு நிமிஷங்களுக்கு மேல் எடுத்துக் கொள்ளமாட்டேன் என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன். ஆகவே, இந்த அரசாங்கம் 6 மாத காலத்திற்குள்ளே அந்த "lease right"-ஐ மாற்றி ஏன் பர்ன் அண்டு கம்பெனிக்குக் கொடுத்தது என்று கேட்க விரும்புகிறேன். அரசாங்க செய்தித் துறை இலாகா வெளியீட்டில் தொழிலை ஆரம்பிப்பதற்காகக் கொடுத்தோம் என்று சொல்லப்படுகிறது. 1956-ம் வருடத்திலே இண்டஸ்டிரியல் லைசென்சு வாங்கும்பொழுது பர்ன் அண்டு கம்பெனி இங்கே தொழிலை ஆரம்பிப்பதற்கு மனுச் செய்திருந்தார்கள். நம்முடைய ராஜ்ய சர்க்கார் ஏற்று நடத்தும் பொறுப்பை விட்டுவிட்டு எதற்காக இதை மாற்றிக்கொடுக்க வேண்டுமென்பது தான் புரியவில்லை. இன்னொரு விஷயத்தையும் சொல்ல விரும்புகிறேன். முதலிலே நம்முடைய அரசாங்கம் மாற்றுவதற்கு அனுமதியளிக்க மறுத்தது. பின்னர் டில்லி அரசாங்கமும் மறுத்தது. அதன் பின்னர் மீண்டும் மனுச்செய்து கொண்டார்களா ? எந்த மனுவின் பேரில் மாற்றுவதற்கு சாங்ஷன் கொடுக்கப்பட்டது ? இன்னும் ஜனவரி 10-ம் தேதிக்குப் பின்னர் இந்த அதிகாரம் கொடுக்கப்பட்டதா, இல்லையா என்பதையும் அறிய விரும்புகிறேன். இப்பொழுதே வேறு பிரைவேட் நிலங்களும் இருக்கின்றன. ராவ் சாகிப் ரங்கநாதன் அவர்கள் வைத்திருக்கும் 150 எக்கர் நிலத்திலிருந்து கிட்டத்தட்ட $1\frac{1}{2}$ லட்சம் ரூபாய் கிடைக்கிறது. அதைவிட 10 மடங்கு அதிகமாயுள்ள 1,600 ஏக்கரா அரசாங்க நிலத்திலிருந்து 30,000 அல்லது 40,000 ரூபாய் தான் கிடைக்கிறது என்றால், குத்தகைக்குக் கொடுக்கும் விஷயத்திலே கூட அரசாங்கம் கண்ணும் கருத்துமாயில்லை என்று தான் அமைச்சர் பதிலிருந்து தெரிகிறது. இவற்றை எல்லாம் அமைச்சர் அவர்கள் விளக்கிச் சொல்லவேண்டும். மேலும் ஜனவரி 10-ம் தேதிக்கு மேல் கொடுத்திருந்தால் அது செல்லுபடியாகுமா ? ஸ்டாண்டர்டு ரெஜிஸ்தரில் பதிவு செய்யப்படவில்லை. 30 நாள் நோட்டீஸ் கொடுக்கப்படவில்லை. வேறு தொழில் நிபுணர்களுக்கு வாய்ப்பு அளிக்கப்படவில்லை. ஆகவே இந்த உரிமையை இந்த பர்ன் அண்டு கம்பெனிக்கு மாற்றி இருந்தாலும் கூட, அதை ரத்து செய்து விட்டு, அரசாங்கமே ஏற்று நடத்த வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

[13th September 1958

MR. SPEAKER : அடுத்தபடியாக ஸ்ரீ கல்யாணசுந்தரம் அவர்கள் பேசுவார்கள். இனிமேல் அங்கத்தினர்கள் 5 நிமிடங்களுக்குள் முடிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

SRI M. KALYANASUNDARAM : இந்தப் பிரச்னை நம்முடைய சபை முன்பு கடந்த இரண்டு வருட காலமாகவே கேள்வி ரூபமாகவும், உப மான்யங்களின் மீது பேசக்கூடிய நேரத்திலும் எழுப்பப்பட்டிருக்கிறது. அந்தச் சமயங்களில் எல்லாம் அமைச்சர் அவர்கள் கொடுத்த பதில் என்ன வென்றால், ஸிண்டிகேட்டுக்கு நிச்சயமாக கொடுக்கப்படமாட்டாது என்பது தான். சர்க்காராவது அல்லது வேறு தனியார் யாராவது எடுத்து நடத்து வது பற்றி ஆலோசிக்கப்படும் என்ற பதிலைக் கொடுத்திருக்கிறார்கள். திடீரென இப்பொழுது பர்ன் அண்டு கம்பெனிக்கு காலாவதி ஆவதற்கு முன்னதாகவே மாற்றப்பட்டிருக்கிறது. அதன் காரணம் என்ன என் பதைப் பற்றி இப்பொழுது சச்சரவுகள் கிளப்பப்படுகின்றன. இந்தப் பிரச் னையிலே சில சுயநலக்காரர்கள் பிரசாரம் செய்கிறார்கள் என்பதை மறந்து விட்டு, நம்முடைய ராஜ்ய வருவாயை அபிவிருத்தி செய்வதற்கு எந்த அளவுக்கு ராஜ்ய சர்க்கார் பயன்படுத்தியிருக்கிறார்கள் என்பதைப் பற்றித்
1–30 p.m. தான் நான் என்னுடைய கவலையைத் தெரிவிக்க விரும்புகிறேன். ராஜ்ய சர்க்கார் ஏற்று நடத்தினால் 3 லட்சம் ரூபாய்தான் லாபம் கிடைக்கும், போதுமான லாபம் கிடைக்காது என்று அமைச்சர் அவர்கள் பதிலில் சொன்னது எனக்கு வருத்தத்தைக் கொடுக்கிறது. இது எந்தத் தொழில் நிபுணர்கள் கொடுத்த ஆதாரம் என்று எனக்குப் புரியவில்லை. ராஜ்ய சர்க்கார் இந்தப் பகுதியிலிருக்கும் சில தொழில் அதிபர்களுடைய ஒத் துழைப்பைப் பெற்றுவது இந்தத் தொழிற்சாலையை நடத்துவதற்கு முயற்சி எடுத்தார்களா ? அத்தகைய முயற்சி எடுத்துக்கொள்ளவில்லை. என்று தான் கனம் மந்திரி அவர்கள் கொடுத்த பதிலிலிருந்து என்னால் தெரிந்து கொள்ள முடிகிறது. நம்முடைய ராஜ்யத்தில் சில பேர்கள் இது விஷயமாக முன்வந்திருக்கிறார்கள். அப்படி முன்வந்தார்களேயானால், அதைப் பரிசீலனை செய்து, ஏன் அவர்களுக்குக்கொடுக்க முடியவில்லை என்பதற்குப்பதில் சொல்ல வேண்டும். 1955 பிப்ரவரியில் என்று நினைக்கிறேன், சேலம் ஜில்லாவில் இந்தத் தொழிலைத் தாங்கள் நடத்துவதாக சிலர் முன்வந்தார்கள், அதற்கு அவர்களுக்கு லைசென்ஸ் இல்லையென்று சொல்லப்பட்டது. லைசென்ஸ் வாங்குவது ராஜ்ய சர்க்கார் முனைந்தால் ஒரு கஷ்டமான வேலை அல்ல. ராஜ்ய சர்க்காரும், மத்திய சர்க்காரும் பார்த்து இந்த வட்டாரம் அபிவிருத்தி செய்யப்படவேண்டுமென்று தீர்மானித்து, இந்த வட்டாரத்தில் இதை ஒப்படைக்கவேண்டும், ராஜ்ய சர்க்கார் எடுத்து நடத்த வேண்டுமென்று சொன்னால், லைசென்ஸ் பெறுவது குறுக்கே முட்டுக் கட்டையாக இருக்கும் என்பதை என்னால் நம்பமுடியவில்லை. அப் படியிருந்தபோதிலும் பர்ன் அண்டு கம்பெனிக்குக் கொடுத்திருக்கிறார்கள். ஸ்கோடாஸ் இந்தியா (பிரைவேட்), லிமிடெட் ஒரு ஸெகோஸ்லோவேகியா கம்பெனி. இயந்திரங்களை உற்பத்தி செய்வதில் மிகத் திறமையான நாடு ஸெகோஸ்லோவேகியா என்பதை யாரும் மறுக்க முடியாது. மாக்னெ ஸைட் கனிப் பொருள்களுக்கு ஏகபோகமாக உரிமை இருக்கக்கூடிய நாடு இது. இந்தியாவிற்கு அடுத்தபடியான நாடு என்று சொல்லலாம். இந்தி யாவும் ஸெகோஸ்லோவாக்கியாவும் மாக்னெஸைட் கனிப் பொருள்கள் உற்பத்தி செய்வதில் மிகச் சிறந்த நாடுகள். ஸ்கோடாஸ் இந்தியா (பிரைவேட்), லிமிடெட் இதற்கு வேண்டிய இயந்திரங்களை கொடுப்பதாக வாக்குறுதி கொடுத்திருந்தார்கள். (கனம் ஸ்ரீ ஆர். வெங்கடராமன் : எந்தத் தேதியில் ?) 1958-ம் வருஷம் ஜனவரி மீ 6-ம் தேதி கொடுத்திருக்கி றார்கள். இவற்றையெல்லாம் பரிசீலனை செய்து இவர்களுடைய ஒத்து ழைப்பைப் பெற்று நம்முடைய ராஜ்யத்திற்கு அனுகூலம் கிடைக்கக்கூடிய முறையில் இதை பயன்படுத்திக்கொள்ளக்கூடாதா ? ஏன் இதைச் செய்ய அரசாங்கம் தவறிவிட்டது ? மத்திய சர்க்காரின் நிர்ப்பந்தத்தின் மூலம் இப்படிச் செய்தார்கள் என்றுதான் நினைக்கவேண்டியிருக்கிறது. நம் முடைய ராஜ்ய சர்க்காரின் வருவாயை அதிகரிக்கக்கூடிய முறையில் இந்தப் பிரச்னையை அரசாங்கம் கையாண்டிருக்கவேண்டும். நம் ராஜ்ய வருவாயைப் பற்றி கவலைப்படாமல், வேறு ஏதோ நிர்ப்பந்தத்தின் பேரில்

13th September 1958] [Sri M. Kalyanasundaram]

தான் இந்த உரிமையை பர்ன் அண்டு கம்பெனிக்கு மாற்றுவதற்கு அனுமதி அளித்திருக்கிறார்கள் என்று கருதவேண்டியிருக்கிறது. மற்றவர்களுக்கு அனுமதி கொடுக்காததற்கான காரணங்களையாவது அறிய விரும்புகிறேன்.

அறுபது ஆண்டுகளாக இந்த ஸின்டிகேட் நன்றாகச் சம்பாதித்திருக்கிறார்கள். இரண்டு வருடங்கள் வேண்டுமானால் இதில் குறைவாக இருக்கலாம். இந்தக் காலத்தில் இரண்டு முறை அனுமதி கொடுக்கப்பட்டிருக்கிறது. இவர்கள் நல்ல லாபம் சம்பாதித்திருக்கிறார்கள். எனக்கு முன்பு பேசிய அங்கத்தினர் கூறியபடி, ஏ. கே. ஆர். குவாரி ஒரு லட்ச ரூபாய் முன் பணம் கொடுத்து, டன்னுக்கு ரூ. 5 கொடுப்பதாக முன் வந்தார்கள். ஆனால் சர்க்கார் அனுமதி அளித்திருக்கக்கூடிய கம்பெனி டன் ஒன்றுக்கு 9 அணு தான் கொடுக்கிறது. இதனால் வருஷத்திற்கு ரூ. 19,000 அவர்களுக்கு லாபம் கிடைக்கக்கூடிய நிலைமை இருக்கிறது. இப்படியிருந்தும், தொழிலாளிக்குக் குறைவான கூலியைக் கொடுத்துக் கொண்டு, 60வருஷமாக இந்த ஸின்டிகேட் நன்றாகச் சம்பாதித்திருக்கிறார்கள். இப்பொழுது மிச்சம் இருக்கக்கூடிய இயந்திரங்களையும் மற்றப் பொருள்களையும் விட்டுவிட்டுப் போவதனால் செத்துப் போய்விட மாட்டார்கள், ஏழையாகப் போய்விட மாட்டார்கள். அவர்களுக்கு டிரான்ஸ்பெர் செய்வதற்கு வசதி செய்து கொடுத்தால், ஒப்பந்தத்தின்படி பழைய சாமான்களுக்கும் நல்ல விலை வைத்து 3 லட்சம் பவுன் ஸ்டர்லிங்க்கு விற்றிருக்கிறார்கள் என்று கேள்விப்படுகிறேன். அதாவது, கிட்டதட்ட ரூ.40 லட்சம் என்று நினைக்கிறேன். ரூ. 40 லட்சத்திற்கு சாமான்களை விற்றது மட்டுமல்ல, டிரான்ஸ்பெர் செய்ததற்காக பிரத்தியேகமாக 1 லட்சம் பவுன், அதாவது ரூ. 13½ லட்சம் சன்மானமாகப் பெற்றதாகவும் கேள்விப்படுகிறேன். இது உண்மையானால் அந்த அக்ரிமெண்டை வரவழைத்து பரிசீலனை செய்து பார்த்து ரூ. 13½ லட்சத்தை லண்டனுக்குக் கொண்டு போகாமலாவது தடுக்க வேண்டுமென்று மத்திய சர்க்காருக்கு சிபார்சு செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். இந்தப் பணத்தை அவர்கள் நம்முடைய நாட்டைவிட்டுக் கொண்டு போகவிடக்கூடாது என்பது என்னுடைய அபிப்பிராயம். ஒழுங்கற்ற முறையில் இவ்வாறு நடந்திருப்பது உண்மையாக இருந்தால், அதைப் பரிசீலனை செய்து அவர்கள் இந்தத் தொகையை லண்டனுக்கு மாற்றமுடியாமல் தடை செய்வதற்கு வேண்டிய நடவடிக்கைகளை எடுத்துக்கொள்ள வேண்டுமென்பது என்னுடைய அபிப்பிராயம்.

இரண்டாவதாக, டிரான்ஸ்பர் சம்பந்தப்பட்ட மட்டில் இவர்களுக்கு இருக்கக்கூடிய உரிமையை ஜனவரி மாதம் 1959-ம் ஆண்டு 10-ம் தேதிக்குப் பிறகு தான் மாற்ற முடியும். அதுமட்டுமல்ல, ரூ. 13 லட்சம் சன்மானமாகக் கொடுத்திருக்கிறார்கள். அப்படி அவர்கள் மாற்றுவதற்கு அவர்களுக்கு அதிகாரம் கிடையாது. நம்முடைய சர்க்கார்தான் மாற்றுவதற்குப் பூரண அதிகாரம் உடையவர்கள். இந்தக் காலவரை காலாவதியாவதற்குள் மாற்றுவது என்றால், அதை விளம்பரப்படுத்தி, ஆட்சேபனைகளைக் கேட்டு, யார் முன் வருகிறார்கள் என்பதையும் பரிசீலனை செய்து பிறகு மாற்றுவதுதான் சரியான முறை. அப்படியிருக்கும்பொழுது முன் கூட்டியே 6 மாதங்களுக்கு முன்னாலேயே பர்ன் அண்டு கம்பெனிக்கு மாற்றுவதற்கு ஏன் வாக்குறுதி கொடுத்தார்கள் என்பது பற்றி நாங்கள் தெரிந்துகொள்ள வேண்டிய விஷயம். பர்ன் அண்டு கம்பெனியைத் தவிர, வேறு இந்தத் தொழிலை நடத்துவதற்கு ஆள் கிடையாது என்று சொல்லக்கூடியது உண்மை அல்ல. அதற்கு மாறாக, மற்றவர்களும் இதற்காக முன் வந்தார்கள். அப்படியிருக்கும்பொழுது இந்த உரிமைகளை புறக்கணித்து—உரிமை என்று இல்லாவிட்டால்—மனுக்களை புறக்கணித்து 6 மாதத்திற்கு முன்கூட்டியே பர்ன் அண்டு கம்பெனிக்கு இதைக் கொடுப்பதாக சம்மதம் தெரிவித்துள்ளார்கள். இதை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. ஆகையால், அமைச்சர் அவர்கள் இது சம்பந்தமாக நான் சொன்ன விவரங்களை நன்கு பரிசீலனை செய்து, பர்ன் அண்டு கம்பெனி செய்துகொண்டுள்ள ஒப்பந்தத்தை வரவழைத்து, நான் சொல்லும் குற்

[Sri M. Kalyanasundaram] [13th September 1958

றச்சாட்டுகள் உண்மையாக இருந்தால், அதை ரத்து செய்து, 1959-ம் வருஷம் ஜனவரி மாதத்தில இந்த ஒப்பந்தம் காலாவதியாகும்போது வேறு யாராவது நடத்துவதற்கு நம் ராஜ்யத்தில் முன் வந்தால், அவர்கள் இதை நடத்துவதற்கு அனுமதி அளிக்கவேண்டும். இல்லாவிட்டால், ராஜ்ய சர்க்காரே இதை எடுத்து நடத்த வேண்டுமென்று கேட்டுக்கொள்ளு கிறேன். ராஜ்ய சர்க்கார் இதை நடத்துவதில் எந்த விதமான கஷ்டமும் இருக்கும் என்று நான் நினைக்கவில்லை. ஆகவே, இதை புனராலோசனை செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

**Mr. SPEAKER :** The hon. Member has taken seven minutes.

**Sri M. KALYANASUNDARAM :** I thought it was 10 minutes, Sir.

**Mr. SPEAKER :** The Hon. Minister has extended the time limit only by 15 minutes. It is not as if it is extended for hours together.

***Sri A. MARIAPPAN :** கனம் சபாநாயகர் அவர்களே, நம்முடைய தொழிலமைச்சர் சேலத்திலுள்ள மாக்னிஸைட் தொழிற்சாலையை பர்ன் அண்டு கம்பெனிக்கு நல்ல முறையிலே மாற்றுவதற்கு ஏற்பாடு செய்து, அங்கு இருக்கக்கூடிய தொழிலாளர்களுக்கு வேலை கெடாமல் இருப்பதற்கு வேண்டிய முறையில் இதைச் செய்ததற்காக அவர்களை நான் பாராட்டுகிறேன். திருவாளர் ராமசுவாமி பிள்ளை அவர்கள். திருவாளர் கலியாணசுந்தரம் அவர்கள் தொழிலமைச்சர் இதை எந்த முறையில் ஏற்பாடு செய்தார்கள், எந்த முறையில் நடவடிக்கை எடுத்தார்கள், என்பதைத் தினம் தினம் கண்காணித்து வந்திருக்கிறார்கள். அவர்களிடம் நேரிடையாக இது பற்றிப் பேசியிருக்கிறார்கள். சேலத்திலுள்ள கோவாபரேடிவ் சென்டிரல் பாங்கு, தலைவர் மூலம் கோவாபரேடிவ் ஹோல்ஸேல் ஸ்டோர்ஸ் இதை எடுத்து நடத்த முடியுமா என்பது பற்றிப் பரிசீலனை செய்திருக்கிறார்கள். இவர்களெல்லாம் எடுத்து நடத்தக்கூடிய சாத்தியக்கூறு இல்லை என்பது ஓரளவுக்கு நன்றாகத் தெரிந்ததே அல்லாமல், இதில் நம்முடைய மாகாண சர்க்கார் நல்லதோர் முடிவுக்கு வந்திருக்கிறது என்பதையும் ஏற்கனவே ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். தற்பொழுது அரசியல் காரணங்களுக்காக நிலைமையைப் பெரிது செய்து உபயோகப்படுத்திக்கொள்ள வேண்டுமென்பதற்காக இம்மாதிரி சொல்லப்படுகிறது. ஸ்ரீ டி. எஸ். பட்டாபிராமன், ஸ்ரீ காளியண்ணன் போன்றவர்கள் மாகாண சர்க்கார் இதை எடுத்து நடத்தவேண்டும், நடத்தினால் நல்ல லாபம் வரும் என்று கையெழுத்துப்போட்டார்கள் என்று சொல்லப்பட்டது. இம்மாதிரி கையெழுத்து வாங்கிய நபர் சுயநலத்தைக் கருதி இம்மாதிரி செய்தார் என்பது பெரும்பாலோருக்குத் தெரியும். தான் சுய லாபம் சம்பாதிக்க வேண்டுமென்ற நோக்கத்தோடு இம்மாதிரி அந்த நபர் கையெழுத்து வாங்கினார் என்று உணர்ந்த பிறகு சர்க்கார் இது விஷயமாக நல்ல முடிவுக்கு வந்ததைப் பற்றி நான் சர்க்காரையும், தொழிலமைச்சர் அவர்களையும் பாராட்டுகிறேன். அந்த நபரானவர் இந்தத் தொழிலில் மட்டுமல்ல, பல தொழில்கள் சம்பந்தமாக இம்மாதிரி செய்திருக்கிறார். ஆனால், அவர் பேரம் பேசிய தொழில் ஒன்றும் இதுவரை நடைபெறவில்லை என்பது சேலம் ஜில்லாவைச் சேர்ந்த பெரும்பாலோருக்குத் தெரிந்திருக்கும். இது விஷயம் ஸ்ரீ டி. எஸ். ராமசுவாமி பிள்ளைக்கு தெரிந்திருக்காவிட்டாலும், ஸ்ரீ கலியாணசுந்தரத்திற்கு தெரிந்திருக்குமென்று நினைக்கிறேன். இதில் யார் தலையிட்டார்கள், தலையிட்டவர் எப்படிப்பட்டவர், சுய நலத்துக்காக அவர் எவ்வளவு தூரம் பாடுபடுபவர் என்பது அவருக்கு நன்றாகத் தெரிந்திருக்கும். அப்படியிருக்கும்பொழுது அவருடைய கட்சிப் பத்திரிகை இதில் ஈடுபட்டது மிகவும் வருந்தக்கூடிய விஷயம். இதில் மந்திரி அவர்கள் மிகவும் நல்ல முறையில் நடந்துகொண்டிருக்கிறார்கள், தாராளமாக நடந்து கொண்டிருக்கிறார்கள். தொழிலாளர்களுக்கு நன்மை செய்யக்கூடிய விதத்தில் நடந்து கொண்டிருக்கிறார்கள்.

13th September 1958] [Sri A. Mariappan]

ஏதோ அரசியல் காரணத்திற்காக இதுபற்றி அவர்கள் பத்திரிகையில் எழுதியது மிகவும் வருந்தத்தக்கது. இதைக் கலியாணசுந்தரம் அவர்கள் புரிந்து கொள்ளுவார்கள் என்று நினைக்கிறேன். திருவாளர் ராமசுவாமி பிள்ளை அவர்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன், இதில் தவறு கூறுவதற்கு ஒன்றுமில்லை. திருவாளர் ராமசுவாமி பிள்ளையின் நண்பரும் என்னுடைய நண்பருமான ஒருவர் திரு. ராமசாமி பிள்ளை அவர்களைத் தவறான வழியில் இழுத்துச் சென்றிருக்கிறார். மாகாண சர்க்கார் இதில் ஒரு நல்ல முடிவுக்கு வந்திருக்கிறார்கள். மாகாண சர்க்கார் செய்த முடிவு சரியான முடிவு இல்லையென்றால் அங்கு இருக்கக்கூடிய 2,000 தொழிலாளர்கள் வேலையில்லாமல் திண்டாடும் நிலைமை ஏற்பட்டிருக்கும். இதையெல்லாம் தவிர்க்கக்கூடிய முறையில் மாகாண சர்க்கார், குறிப்பாக தொழிலமைச்சர் அவர்கள் ஏற்பாடு செய்ததுபற்றி அவர்களைப் பாராட்டுகிறேன். தவறான வழியில் சென்று நடுவிலே லாபம் சம்பாதிக்கக்கூடிய நபர்களுக்கு, இதே தொழிலாகக் கொண்டவர்களுக்கு நாம் ஊக்கம் அளிக்கக்கூடாது. இதை நன்றாகப் பரிசீலனை செய்து தவறான வழிகளில் செல்லுபவர்களுக்கு ஊக்கம் அளிக்காத முறையில் இதில் முடிவு செய்யப்பட்டிருக்கிறது என்பதைத் தெரிவித்துக்கொண்டு என்னுடைய பேச்சை முடித்துக்கொள்ளு கிறேன். 1–40 p.m

Sri K. R. NALLASIVAM : On a point of order, Sir.

கனம் அங்கத்தினர் யாரோ ஒரு நபரைப் பற்றிச் சொல்கிறாரே அது சரியா ?

Mr. SPEAKER : யாரோ, யாரோ என்றார்கள். பெயரைச் சொல்ல வில்லை. நல்ல வேளையாகப் போச்சு என்று சொல்ல இருந்தேன்.

Sri K. RAMACHANDRAN : சபாநாயகர் அவர்களே, இந்த மாக்னெஸைட் பற்றி நாம் எல்லோரும் நன்றாகத் தெரிந்து கொள்ள வேண்டும். சேலத்தில் இருக்கக் கூடிய மாக்னிஸைட், உலகத்திலேயே சிறந்த " ஓர் " என்று சொல்லப்படுகிறது. உலகத்திலே உள்ள மிகவும் குறைவாகக் கிடைக்கும் உலோகம் என்றும் சொல்லப்படுகிறது. ஆகவே, இதன் உபயோகத்தை மிகவும் சிறந்த முறையிலே செய்யவேண்டும்.

இந்த மாக்னெஸைட் எடுக்கும் குத்தகை முதலில் மாக்னிஸைட் ஸிண்டிகேட்டுக்கு கொடுக்கப்பட்டு இருந்தது. அது ஜனவரி, 1959-ல் முடிவடைகிறது. அது பிரிட்டிஷார் செய்துகொண்ட ஒப்பந்தத்தின்படி 60 வருஷத்திற்குக் கொடுக்கப்பட்டிருந்த குத்தகை. அது முடியும் காலத்தில் அந்தத் தொழிலை, அதாவது கனிப் பொருளை எடுக்கும் வேலையை, ஏன் பப்ளிக் ஸெக்டாரில் எடுத்து நடத்தாமல், தனி லைஸென் சுக்குக் கொடுக்க வேண்டும் என்று புரியவில்லை. அரசாங்கமே ஏன் எடுத்து நடத்தக் கூடாது, ஒரு மாறுதலுக்கு ஒப்புக்கொள்ள வேண்டிய அவசியம் என்ன? நல்ல வாய்ப்புகள் இருப்பதை ஏன் உபயோகப் படுத்திக்கொள்ளக்கூடாது ?

இந்தத் தொழிலுக்கு உத்தேசமாக ரூ. 25 லட்சம் முதலீடு செய்ய வேண்டும் என்று தெரிகிறது. இப்பொழுது வர இருக்கிற, பர்ண் அண்டு கம்பெனியார் ரூ. 70 லட்சத்தில் ரிப்ராக்டரி ப்ளாண்ட் அமைக்க ஒப்புக் கொண்டு இருப்பதாகத் தெரிகிறது. இந்த ரூபாயை ராஜ்ய சர்க்காரே போட்டு நடத்தக் கூடாதா ? அதில் வரும் லாபத்தை நாம் அடையச் செய்யக் கூடாதா அவசியமானால், நம் சர்க்கார் மத்திய சர்க்கார் உதவியைக் கொண்டு, பாக்டரியைச் சேலத்தில் ஆரம்பித்து, ரிப்ரேக்டரி ப்ளாண்டையும் அமைக்கக் கூடாதா, இந்த கனிப் பொருளினால் வரும் லாபத்தை நாம் ஏன் அடையக் கூடாது என்று கேட்க விரும்புகிறேன். இப்பொழுது பர்ண் அண்டு கம்பெனிக்கு மாற்ற வேண்டிய அவசியம் என்ன என்று புரியவில்லை. ஆகவே ஏற்கனவே இருக்கும் ஒப்பந்தம் முடிவடையும் காலத்தில், நம் அரசாங்கமே அந்தத் தொழிலை எடுத்து

நடத்த முன்வரவேண்டும் என்று வேண்டிக் கொள்ளுகிறேன். தங்கள் தீர்மானத்தைப் புனராலோசனை செய்து, சர்க்கார் தாங்களே இதை எடுத்து நடத்தி லாபத்தை நாமே அடையச் செய்யவேண்டும்.

MR. SPEAKER : ஸ்ரீ கோவிந்தசாமி. இரண்டு நிமிஷம் பேசலாம்.

* SRI A. GOVINDASAMY : ஸார், இந்தக் குத்தகை மாற்றத்தை ஒத்துக் கொள்ளாது என்று நம் சர்க்கார் திட்ட வட்டமாக அறிவித்திருந்தும், இப்பொழுது எப்படி ஒப்புக்கொண்டார்கள் என்பது தெளிவாக வில்லை. இந்த முதல் குத்தகை வெள்ளைக்காரனால் கொடுக்கப்பட்டது. வெள்ளைக்காரனை விரட்டி விட்டோம் என்று சொல்லிக்கொண்டு, வெள்ளைக்காரன் சம்பந்தப்பட்டவர்களால் சுரண்டுவதற்கு எப்படி ஒத்துக் கொள்கிறார்கள் என்பது நமக்குப் புரியவில்லை. இதைச் சென்னை அரசாங்கமே செய்யலாம், அல்லது மத்திய சர்க்கார் உதவி கொண்டு செய்யலாம். இந்தத் தொழிலை நடத்த சென்னை ராஜ்யத்திலே, தென்னாட்டிலே ஆட்களில்லாமல், கல்கத்தாவிலிருந்து வெள்ளைக்காரர் சம்பந்தப்பட்ட கம்பெனிக்குக் கொடுக்கவேண்டுமா என்று கேட்கிறேன். இதைப் பார்த்து பொது மக்கள் அதிருப்தியடைவார்கள். ஆட்சிமீதும், அமைச்சர் மீதும் தவறான எண்ணத்தைக்கொள்வார்கள். பர்ன் அண்டு கம்பெனிக்கு குத்தகை மாற்றம் செய்வதை விட்டு, அமைச்சர் அவர்களுக்கு இருக்கும் நல்ல பெயர் நிலைத்து இருக்கச் செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

* THE HON. SRI R. VENKATARAMAN : கனம் சபாநாயகர் அவர்களே, இந்த சேலத்தில் இருக்கும் மாக்னிஸைட் ஒரு முக்கியமான கனிப் பொருள். ஆனால் அது உலகத்திலேயே உயர்ந்தது வேறு எங்கும் கிடையாது என்று சொல்வது அவ்வளவு சரியல்ல. ஆனாலும், நம் ராஜ்யத்துக்கு நன்மை பயக்கக்கூடிய ஒரு உயர்ந்த கனிப் பொருள். அதைச் சிறந்த முறையில் உபயோகப்படுத்துகிறோமா என்று பார்க்க வேண்டும்.

இந்த மாக்னிஸைட் எடுக்கும் தொழிலை 60 வருஷங்களுக்கு முன்பு ஒரு வெள்ளைக்காரக் கம்பெனிக்கு, மாக்னிஸைட் ஸிண்டிகேட்டுக்கு, குத்தகையாக கொடுத்திருந்தார்கள். குத்தகை முடிவானது, 1959-ம் வருஷம் ஜனவரி, 10-ம் தேதி ஏற்படுகிறது. இதற்கு முன்னால் இந்தக் கம்பெனி குத்தகையை பர்ன் அண்டு கம்பெனிக்கு மாற்ற வேண்டும் என்று கேட்டார்கள். படிப்படியாக விவரங்களைச் சொல்லுகிறேன். தயவு செய்து கவனமாகக் கேட்கவேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன். அப்படிக் கேட்ட போது, மத்திய சர்க்கார், தாங்களே அந்த இடத்தில் ஒரு பாக்டரியை வைக்கப் போவதாக உத்தேசம், ஆதலால் அவர்களுக்குக் கொடுக்கக் கூடாது, என்று சொன்னார்கள். அதன் மேல், முதலில் குத்தகை கொடுக்கமாட்டோம் என்று சொன்னோம். அதன் பிறகு, மத்திய சர்க்கார் தங்களால் இந்தக் கனிப் பொருள் தொழிலை எடுத்து நடத்த முடியாது என்றும், நீங்கள் யாருக்கு வேண்டுமானாலும், பர்ன் அண்டு கம்பெனிக்கு வேண்டுமானாலும், கொடுங்கள் என்று சிபாரிசு செய்தார்கள். மத்திய சர்க்கார் எடுத்து நடத்த முடியாவிட்டாலும், திடீரென்று ஒருவருக்கும் மாற்ற வேண்டாம், ராஜ்ய சர்க்காரே எடுத்து நடத்த முடியுமா என்று பரிசீலனை செய்து பார்க்க வேண்டுமென்று, ஒருவருக்கும் மாற்ற முடியாது என்று சொல்லிவிட்டோம். மாற்ற முடியாது என்றதும், அவர்கள், மத்திய சர்க்காரிடம் அப்பீல் போட்டார்கள். அவர்களுக்கு இந்த விஷயத்தில் உரிமை இல்லாததால், அப்பீல் தள்ளுபடி செய்யப்பட்டது. ஒரு வருஷ காலமாக, முக்கியமாக, நான் இந்த இலாகா பொறுப்பை ஏற்றுக்கொண்ட பிறகு, நமது ராஜ்யத்திலே நல்ல தொழில்களை விஸ்தரிக்கவேண்டும் என்பதற்காக, யோசனைகள் எல்லாம் செய்தோம். அவ்வாறு செய்யும் போது, இந்த மாக்னிஸைட்டை சுண்ணாம்பாக மாற்ற முடியுமா என்றும் பார்த்தோம். "கால்ஸியம் டெட் பர்ண்ட்", சுருக்கமாக புரிந்துக் கொள்ள சுண்ணாம்பு, என்கிறேன்.

13th September 1958] [Sri R. Venkataraman]

இதுதான் ஸிண்டிகேட் செய்து வருகிறது. இந்த மாக்னிஸைட்டை செங்கல்களாக, ரிப்ரேக்டரிசாகச் செய்யலாம். அப்படிச் செய்ய பெரிய மூலதனம் வேண்டும், டெக்னிகல் அட்வைஸ் வேண்டும். ஆகவே உடனடியாக அதைச் செய்ய முடியும் என்று தோன்ற வில்லை. நமது ராஜ்யத்திலேயே யாராவது நடத்த முடியுமா என்றும் யோசனை செய்தோம்.

அந்தச் சந்தர்ப்பத்தில் **Tiffin Barytes**-ஐச் சேர்ந்தவர்கள் இப்பொழுது யார் இந்தக் குற்றச்சாட்டை பரப்பிக்கொண்டிருக்கிறார்களோ அவர்கள் அவர்களுடைய டைரெக்டர்களில் ஒருவர் என்னை வந்து பார்த்தார். நான் அவரிடத்தில் கேட்டேன் : " சென்னை ராஜ்யத்திற்குப் பெரிய தொழில் வேண்டுமென்று நான் விரும்புகிறேன் ; உங்களுடைய **Tiffin Barytes** கம்பெனி இந்த ரிப்ராக்டரி வைக்க முடியுமா ? " என்று கேட்டேன். அவர் " ரிப்ராக்டரி வைப்பதற்கு எங்களால் முடியாது ; நாங்கள் வேண்டுமானால் சுண்ணாம்பு செய்கிறோம் ; அதாவது கால்சியம் டெட் பர்ண்ட் செய்கின்றோம் " என்று சொல்லி விட்டார்கள். 1–50 p.m.

அடுத்தபடியாக சேஷசாயி கம்பெனியார் வந்து என்னைப் பார்த்தார்கள். அவர்களையும் " நீங்கள் ரிப்ராக்டரி வைக்க முடியுமா " என்று கேட்டேன். அவர்கள் " ரிப்ராக்டரி வைக்க முடியாது, கால்சியம் டெட் பர்ண்ட் மாத்திரம் செய்ய முடியும், அதைச் செய்கிறோம் " என்று சொன்னார்கள்.

மேலும் டாட்டா கம்பெனியிலிருந்து வந்து என்னைப் பார்த்தார்கள். அவர்களையும் கேட்டேன். " உங்களால் இந்த ராஜ்யத்தில் வந்து ரிப்ராக்டரி செய்ய முடியுமா " என்று. அவர்கள், " எந்த இடத்தில் செங்கற்கள் உபயோகப்படுத்த வேண்டுமோ அந்த இடத்தில் தான் செய்வது லாபகரமாக இருக்கும், கட்டுபடியாக இருக்கும் ; சேலத்தில் செய்து விட்டு அவைகளை நாங்கள் மத்தியப் பிரதேசத்திற்கு எடுத்துக்கொண்டு போனால் அவைகளின் முனைகள் உடைந்து போய் உபயோகப்படுத்த முடியாது ; ஆகவே நாங்கள் இங்கே வந்து செய்யமுடியாது " என்று சொல்லி விட்டார்கள்.

அதன் பிறகு ராஜ்ய சர்க்கார், இந்தச் சுண்ணாம்பு செய்வதோடு நிறுத்திக்கொள்வதா, ரிப்ராக்டரி வைப்பது லாபமா என்று ஆலோசனை செய்தது. முதலில் சுண்ணாம்பு செய்வதாக இருந்தால் அதைச் செய்வதற்கு நம்முடைய இண்டஸ்ட்ரியல் டிபார்ட்மெண்டைப் பரிசீலனை செய்யச் சொன்னோம். அவர்கள், அதற்கு 22 லட்ச ரூபாய் வேண்டும் ; அந்த மூலதனம் போட்டால் 2 லட்சம் 85 ஆயிரம் ரூபாய் லாபம் வரும், சற்றேறக்குறைய மூன்று லட்சம் ரூபாய் லாபம் கிடைக்கும் என்று சொன்னார்கள்.

அடுத்தபடியாக ரிப்ராக்டரி வைத்தால் என்ன நமக்கு ஆகும் என்று ஆலோசனை செய்தோம். சென்னை ராஜ்ய சர்க்காரால் நடத்த வேண்டுமானால் அதற்கு ஒரு கோடி ரூபாய் ஆகும் என்று அவர்கள் எஸ்டிமேட் போட்டார்கள். இந்த எஸ்டிமேட் சாதாரணமானவரால் போடப்படவில்லை.

**' International experts including Mr. Bengston, adviser to the Government of India, have inspected the site and estimated that the whole project will require at least about Rs. 1 crore.'**

ஆகவே ஒரு கோடி ரூபாய் மூலதனத்தைப் போட்டு அதற்கு வேண்டிய தொழில் நுட்பத்தை வைத்து இந்த பாக்டரியை ஆரம்பிக்க வேண்டுமென்றால், எப்படி அதைச் செய்வது என்று ஆலோசனை செய்தோம். நம்மால் ஆன எல்லா முயற்சிகளையும் செய்து பார்த்தோம். மத்திய சர்க்காரிடத்தில் சென்று, ஒரு கார்போரேஷனை வைக்கலாம், அதில் 51 சதவிகிதம் மத்திய சர்க்காரும், 25 சதவிகிதம் சென்னை ராஜ்ய சர்க்காரும், 24 சதவிகிதம் பர்ன் அண்ட் கம்பெனியும் பங்கு கொள்ளலாம் என்று சொல்லி, அந்தக் கார்போரேஷன் மூலமாக இதை நடத்த முடியுமா என்று ஆலோசனை செய்தோம்.

[Sri R. Venkataraman] [13th September 1958

இதற்கு வேண்டிய தொழில் நுட்பம் இந்தியாவில் இன்றைக்கு பர்ன் அண்ட் கம்பெனியினிடம்தான் இருக்கிறது. அவர்கள்தான் இந்தத் தொழிலை இப்பொழுது வங்காளத்தில் செய்துகொண்டிருக்கிறார்கள். ஆகவே அவர்களை அணுகியபோது—இன்னும் பெரிய இடத்தில் சொல்லிக்கூட பர்ன் அண்ட் கம்பெனியிடம் சொல்லச் சொன்னோம். "சர்க்கார் துறையில் நாங்கள் சம்பந்தப்பட மாட்டோம்; நாங்கள் தனியார் துறையில் வேலை செய்யக்கூடியவர்கள்" என்று சொல்லி அவர்கள் மறுத்து விட்டார்கள்.

அவர்கள் மறுத்த பிறகு, சென்னை ராஜ்ய சர்க்காராவது எடுத்துக் கொண்டு செய்ய முடியுமா என்று பார்த்தால், ஒரு கோடி ரூபாயும் தொழில் நுட்பமும் வேண்டும் என்ற நிலை ஏற்பட்டது. இவையெல்லாம் நம்மிடத்தில் இல்லை. வீணாகக் கண்ணை மூடிக்கொண்டு உலகமே இருண்டு போய் விட்டது என்று நினைக்கக்கூடாது. ஆகையால் இதை எடுத்துச் செய்யக் கூடியவர்கள் இருந்தால் அவர்களைக் கூப்பிட்டு, இதைக் கொடுத்து நடத்தினால் நல்லது என்று எங்கள் மனதில் தோன்றியது.

முக்கியமான அந்தச் சந்தர்ப்பத்தில் ஒரு தொழிலாளர் பிரச்னையும் ஏற்பட்டு விட்டது. குத்தகை மாற்றம் செய்யவில்லை என்று தெரிந்தவுடன் மாக்னஸைட் சின்டிகேட் (**Magnesite Syndicate**)—இப்பொழுது குத்தகைக்கு வைத்துக் கொண்டிருப்பவர்கள்—ஆயிரம் தொழிலாளர்களுக்கு மேல் வேலையிலிருந்து நீக்கம் செய்வதற்கு நோட்டீஸ் கொடுத்து விட்டார்கள். "எங்களிடம் ஏராளமான மாக்னஸைட் சேர்ந்து விட்டது, அதை நாங்கள் இனி வைத்துக் கொண்டு எங்களால் சமாளிக்க முடியாது, ஆகவே நாங்கள் எல்லோரையும் வேலையிலிருந்து நீக்கி விடுவோம்" என்று சொன்னார்கள்.

சர்க்கார், எப்படியிருந்தாலும் ரிப்ராக்டரி தொழிற்சாலை வைப்பதன் மூலமாக நாம் சாதாரணமாக சுண்ணாம்பு செய்வதைவிட—நமது ராஜ்யத்திற்கு மேம்பாடு வரும் என்ற திடமான அபிப்பிராயம் உள்ளதினால்தான், எப்படியாவது இந்த ராஜ்யத்திற்கு ரிப்ராக்டரி தொழிற்சாலையைக் கொண்டு வந்துவிடவேண்டும் என்று முயற்சி செய்தோம். சுண்ணாம்பு செய்கின்ற வேலையை மாத்திரம் நாம் எடுத்துச் செய்தால் இப்பொழுது இருக்கும் தொழிலாளர்களில் முக்கால்வாசி பேர்களுக்குத்தான் வேலை கொடுக்க முடியும்; ஆனால் ஒரு கோடி அல்லது 70 லட்ச ரூபாய் செலவாகும். அது பர்ன் அண்ட் கம்பெனி எஸ்டிமேட். ஆனால் இண்டர் நாஷனல் எக்ஸ்பர்ட் கொடுத்த எஸ்டிமேட் ஒரு கோடி ரூபாயாகும். எந்த மூலதனம் போட்டாலும், எவ்வளவு அதிகமான மூலதனம் போட்டு யாராவது ஒருவர் தொழிலை அங்கே நடத்தினால், ஆன்சிலயரி இண்டஸ்ட்ரிகள் நன்றாக வருமே, நம்முடைய மக்களுக்கு இன்னும் தொழில் வாய்ப்பு வருமே, என்ற ஒரே காரணத்திற்காக இந்தக் குத்தகை மாற்றம் செய்வதற்குச் சர்க்கார் முன் வந்தது. இதில் ஏதோ 25 லட்சம் ரூபாய் போட்டால் 3½ கோடி ரூபாய் வரும் என்று சொல்வது பகல் கனவு என்றுதான் நான் சொல்லுவேன். இண்டர்நாஷனல் எக்ஸ்பர்ட் அவர்கள் ஒரு கோடி ரூபாய் போட்டால் பத்து பர் சென்ட் லாபம் வரும் என்று சொல்லுகிறபோது இங்கே யாரோ 25 லட்சம் ரூபாய் போட்டால் 3½ கோடி ரூபாய் வந்துவிடும் என்று சொல்வது தவறு. இத்துடன் உற்பத்திச் செலவுகளைக் கணக்கிட்டுப் பார்க்கும்போது சாதாரணமாக ஒரு டன் ரிப்ராக்டரி உற்பத்தி செய்வதற்கு ரூபாய் 640 முதல் 650 வரையில் செலவாகும் என்று கணக்கிட்டோம். உலக விலையும் ரூ. 650 தான். நாம் இந்த பாக்டரியை வைப்பதனால்—காஸ்ட், இன்ஷூரென்சு, ப்ரெயிட்—இவைகள் எல்லாம் போக லாபம் பத்து பர் செண்ட் அளவுக்கு வரும்.

ஜெஸ்லோவேகியாவிலிருந்து வேண்டிய இயந்திரங்களைக் கொடுப்பதாக வாக்குறுதி வந்ததாக நண்பர் கலியாணசுந்தரம் அவர்கள் சொன்னார்கள். என்னிடம் பி. என். பாலசுப்ரமணியம் அவர்களுடைய கடிதத்தை 1958-ம் வருஷம் ஆகஸ்ட் மாதம் 6-ம் தேதியில்தான் கொடுத்தார். அந்தத் தேதியில்தான் கடிதம் கொடுக்கப்பட்டது. குத்தகை மாதம் மார்சு மாதம். அவர்களுக்குச் செய்வதாக ஒத்துக் கொண்டோம். எப்ரல் மாதம்

13th September 1958] [Sri R. Venkataraman]

சட்டசபை முன்னால் வைத்தோம். சட்டசபையிலும் ஒப்புக்கொண்டிருக் கிறோம். அதனால் இதில் ஒளிவு மறைவு ஒன்றும் இல்லை. தொழில் மான்யக் கோரிக்கையைச் சபையின் முன் வைத்தபோது அவர்கள் 70 லட்சம் ரூபாய் போட முடியும் என்று சொல்லுகிறார்கள். இன்னும் சுற்றுச் சார்பில் நல்ல தொழிற்சாலை வைக்க வாய்ப்பு இருக்கிறது. விமான தளங்கள் கூட அமைப்பதாகச் சொல்லுகிறார்கள். இதனால் சேலம் முன் னேற்றமடையும், நாம் நடத்தினால் நமக்கு மூன்று லட்சம் ரூபாய் தான் வரும். தொழிலாளர்களுக்கு வேலை கிடைக்கும் என்ற காரணத்தை யொட்டியாவது அதை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று நான் ஏப்ரல் 3-ம் தேதி சட்டசபையில் பேசினேன். அப்பொழுதும்கூட கனம் அங்கத் தினர்கள் இது அவ்வளவு நல்லதா என்று சந்தேகமாக இருக்கிறது என்று சொன்னார்கள்.

அதற்குப் பின்பு ஏதோ இதில் சர்க்கார் தவறு செய்து விட்டதாகக் கற்பனை செய்வதுதான் ஆச்சர்யத்தை விளைவிக்கிறதே தவிர, இதில் எந்த விதமான தவறோ அல்லது தப்பான முறையோ கையாளப்படவில்லை. சட்ட ரீதியாகப் பார்க்கும்போது நாம் இப்பொழுது அவர்களுக்கு மாற்றிக் கொடுத்திருப்பது 1959-ம் வருஷம் ஜனவரி மாதம் 10-ம் தேதி வரையில், தான். ஆனால் என்னுடைய மாரல் ஆப்ளிகேஷன் அவர்கள் எந்த இடத்தில் ஒரு ரிப்ராக்டரி தொழிற்சாலை வைத்து நடத்த வேண்டுமென்று கேட்டாலும், சர்க்காருக்கு இருக்கும் அதிகாரத்தைப் பொறுத்த வரையில் அவர்களுக்குத்தான் இந்தக் குத்தகையை நீடித்துக்கொடுக்கப் போகிறோம். அப்படிக் கொடுக்க வேண்டாம் என்றால் நம்முடைய ராஜ்யத்திற்கு எவ் வளவு நஷ்டம் வரும் என்பதற்கு நீங்கள் தான் பொறுப்பாளி, இதை நீங்கள் தான் முடிவு செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

நம்முடைய ராஜ்யத்தில் தொழில் வளம் மிகவும் குறைவாக இருப்ப தற்குக் காரணம் நம் ராஜ்யத்தில் இருப்பவர்கள் முதலில் தொழில்களை ஆரம்பிக்க முன் வராமல் இருப்பதுதான். முதலில் ஒரு டெக்ஸ்டைல் மில்லை வைத்து விட்டால் மற்றவர்கள் பின்னால் பத்து வைப்பதற்குத் தயாராக இருக்கிறார்கள். ஆனால் முதலில் ஒரு தொழிற்சாலையை வைக்க வேண்டு மென்றால் நம் ராஜ்யத்திலுள்ளவர்கள் முன் வருவதற்குக் கஷ்ட மாக இருக்கிறது. அதற்காகத்தான் யாராவது, அவர்கள் எங்கிருந்து வந்தாலும் சரி, முதலில் ஒரு தொழிற்சாலையை ஆரம்பிக்க முன் வந்தால் அவர்கள் அந்தத் தொழிற்சாலையை ஆரம்பிக்கும்படியாகச் செய்து அதன் மூலம் பற்பல தொழிற் சாலைகளை நாட்டில் விருத்தி செய்து கொள்ள முடியும். நான் ஏதோ சொன்னதை ஒரு விதமான வாக்குகளை அசெம் பளியில் கொடுத்து விட்டு வேறு விதமாகச் செய்து விட்டதாகச் சொல்லு கிறார்கள்.

தயவு செய்து இரண்டே இரண்டு பதில்களை மாத்திரம் படிக்கிறேன். கனம் சட்டநாத கரையாளர் அவர்கள், "இந்த மாக்னசெட் மைனிங்கை பப்ளிக் செக்டரில் எடுத்து நடத்துவோம் என்று ஒரு உறுதி கொடுக்க முடியுமா" என்று கேட்டதற்கு "அப்படி ஒரு உறுதியும் இப்போது கொடுக்கமுடியாது ; அந்த யோசனையும் இருந்து வருகிறது என்று மாத் திரம் சொல்லிக் கொள்ளுகிறேன்" என்று நான் பதில் சொல்லியிருக் கிறேன்.

அடுத்தபடியாக ஏதோ மத்திய சர்க்கார் உத்தரவு போட்டார்களா என்று கேள்வி கேட்டார்கள். அதற்குப் பதிலளிக்கும்போது "இந்த விஷயத்தில் மத்திய அரசாங்கம் வற்புறுத்தியது என்று கனம் அங்கத்தினர் சொன்னது சரியல்ல ; மத்திய அரசாங்கம் சென்னை அரசாங்கத்திற்கு சிபாரிசு செய்தது என்பதுதான் சரியான மொழியாகும்" என்று கனம் எம். பி. சுப்ரமணியம் அவர்களுடைய கேள்விக்கு பதில் சொல்லியிருக்கிறேன்.

ஆகவே இதில் எந்த விதமான மாறுதலும் இல்லை. இது நம்முடைய ராஜ்யத்திற்கு நல்ல தொழில் வாய்ப்புக் கொடுக்கக்கூடிய விஷயம். இதைப் பெரிய கம்பெனிகள் எடுத்து நடத்துவதன் மூலமாக இன்றைக்குத் தொழில்

[Sri R. Venkataraman] [13th September 1958

வளம் பெருகும். இதில் யாராவது தனிப்பட்ட நபர்கள் மனம் வருத்தப் பட்டிருந்தால் எனக்குக்கூட வருத்தம்தான். ஏனென்றால் இவர்களுக்கு அதைச் செய்யக்கூடிய ஆற்றல் இல்லாமல் செய்கின்றேன் என்ற நோக்கத் தோடு சொல்லி மற்றவர்களை ஏமாற்றுகிறார்களே என்ற கவலைதான். இந்தப் பெரிய தொழில்களை அவர்கள் எடுத்து நடத்துவதற்குச் சர்க்கார் இந்தக் காரணத்தினால்தான் அனுமதி கொடுக்க முன் வந்திருக்கிறார்கள். இதில் எந்த விதமான தவறுகளும் ஏற்படவில்லை. எந்த விதமான சட்டத்தவறும் செய்யப்படவில்லை. இது நம்முடைய ராஜ்யத்திற்கு நன்மையைக் கொடுக்கும் என்று சொல்லி இந்த விஷயத்தை விவாதத்திற்கு எழுப்பியதற்காக என்னுடைய நன்றியைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

**Mr. SPEAKER :** The House will now adjourn and meet again at 11 a.m. on Wednesday, the 17th September 1958.

The House then adjourned.

